Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு

கருத்து

மாலைக்கு முதல் மணம்! அதே போல் பேச்சுக்கு முதற் பொருள் கருத்து.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

தொண்டன்

எவ்வித சுய நன்மையும் அடையாமல் உண்மையாக தொண்டுசாக வாழ்பவனே தொண்டன்.

-தந்தை பெரியார்



மலர் : 7 சென்னை 18-4-83 திங்கள் வெளியூர் 19.4.83 செவ்வாய் இதழ்: 179

## சென்னைக்கு கிருஷ்ணா நதிநீர்

# புரட்சித்தலைவர்-என்.டி.ஆர். உடன்பாடு

## புரட்சித்தலைவரின் அற்புத சாதனை

ஹைதராபாத், ஏப். 18- சென்னைப் பெருநகர மக்களுக்கு குடிதண்ணீர் வழங்கும் வரலாற்றுச் சிறப்புமிக்க கிருஷ்ணா நதி நீர் உடன்பாடு இன்று (திங்கள்) பிற்பகல் கையெழுத்தாகிறது இந்த உடன்பாட்டில் தமிழக முதல்வர் புரட்சித்தலைவரும் ஆந்திர முதல்வர் என். டி. ராமாராவும் கையொப்பமிடுகிறார்கள்.

உடன்பாட்டில் கையொப்பமிட இன்று (திங்கள்) காலை ஹைதராபாத்திற்கு வந்து சேர்ந்த முதல்வர் புரட்சித்தலைவரை விமான நிலையத்திற்கு வந்து ஆந்திர முதல்வர் என். டி. ஆர். வரவேற்றார்.

விமான நிலையத்தில் புரட்சித்தலைவருக்கு அமோக வரவேற்பு அளிக்கப்பட்டது.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் இன்று (திங்கள்) காலை சென்னையிலிருந்து விமானம் மூலம் ஹைதராபாத்திற்குச் சென்றார். அவருடன் மின் வாரிய அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், தொழிலாளர் நலத் துறை அமைச்சர் ராகவானந்தம் ஆகியோரும் சென்றனர்.

புரட்சித்தலைவரை வரவேற்பதற்கு ஆந்திர முதல்வர் என். டி. ராமாராவ் விமான நிலையத்திற்கு வந்திருந்தார் அவருடன் அவரது இயக்கமான தெலுங்கு தேசக் கட்சியின் தொண்டர்களும் திரண்டு வந்திருந்தார்கள்.

புரட்சித் தலைவருக்கு ஆந்திர முதல்வர் மாலை அணிவித்ததை தொடர்ந்து ஏராளமான பேர் வரிசை வரிசையாக மாலை அணிவித்தனர்.

விமான நிலையத்தில் உற்சாக வரவேற்பை பெற்ற தமிழக முதல்வரை ஆந்திர முதல்வர் என். டி. ராமாராவ் தமது இல்லத்திற்கு அழைத்துச் சென்றார் தமது இல்லத்தில் காலை சிற்றுண்டி அளித்தார்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் மதியமும் தமது இல்லத்திலேயே உணவு அருந்த வேண்டும் என்று ராமாராவ் கேட்டுக் கொண்டார், அவருடைய வேண்டுகோளை ஏற்று புரட்சித்தலைவர் அவருடைய இல்லத்திலேயே பகல் உணவு அருந்தினார்.

### அதிகாரிகள் ஆலோசனை

அதே சமயத்தில் கிருஷ்ணா நதி நீர் உடன்பாடு பற்றி இருமாநில அரசு அதிகாரிகளும் பேச்சுவார்த்தை நடத்தினார்கள் பேச்சுவார்த்தை சுமுகமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

இன்று (திங்கள்) மாலை 3.30 மணிக்குமேல் அதிகார பூர்வமாக தமிழக முதல்வர் புரட்சித்தலைவரும் ஆந்திர முதல்வர் ராமாராவும் சந்தித்துப் பேசுகிறார்கள். இந்தச் சந்திப்பிற்குப் பின்னர் உடன்பாடு கையெழுத்தாக இருக்கிறது.

### அற்புத சாதனை

சென்னைப் பெரு நகர மக்களுக்கு குடிதண்ணீர் வழங்க வகுக்கப்பட்ட வீராணம் திட்டம் வீணான திட்டமாகி, ஊழலுக்கு உதாரணமான நிலையில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் ஆட்சிப் பொறுப்பை ஏற்றது.

வளர்ந்து கொண்டே வரும் சென்னைப் பெருநகரின் குடிதண்ணீர் தேவையை உணர்ந்து முதல்வர் புரட்சித் தலைவர் கிருஷ்ணா நதி நீர் திட்டத்தை செயல்படுத்த முன்வந்தார்.

ஆந்திர மாநிலத்தில் அடிக்கடி முதல்வர்கள் மாறிய போதிலும் அவர்களுடன் சென்னைக்குக் கிருஷ்ணா நதி நீர் வழங்கும் திட்டம் பற்றி விவாதித்தார். இந்தத் திட்டத்தை துரிதமாகச் செயல்படுத்த வேண்டிய அவசியம் பற்றி வலியுறுத்தினார்.

அதன் பயனாக புரட்சித் தலைவர் அரசின் அற்புத சாதனைகளில் ஒன்றாக சென்னைக்குக் குடிநீர் வழங்கும் கிருஷ்ணா நதி திட்ட உடன்பாடு கையெழுத்தாகிறது.

### நினைத்ததை முடிப்பவர்

கலைத் துறையிலிருந்து அரசியல் அரங்கிற்கு வந்து மக்களால் முதல்வர் பீடத்தில் அமர்த்தப்பட்டுள்ள தமிழக முதல்வர் புரட்சித் தலைவரும், ஆந்திரமுதல்வர் என். டி. ராமாராவும் இந்த உடன்பாட்டிற்கு இறுதி வடிவம் கொடுத்திருக்கிறார்கள்.

நாடு விடுதலையடைந்த நாளில் இருந்து சென்னைக்கு கிருஷ்ணா நதிநீர்த் திட்டம் என்று பேசப்பட்டு வந்தது. அந்தத் திட்டம் கானல் நீர்த் திட்டம் தானோ என்று மக்கள் சலிப்படை

(2-ம் பக்கம் பார்க்க)

---

## செல்வி ஜெயலலிதா நடத்தி வைத்த திருமணம்

காஞ்சிபுரம் ஏப். 18- நெமிலி ஒன்றிய கழகச் செயலாளர் தே. பாண்டுரங்கனுக்கும், மாரி மங்கலம் கிராமம் மாணிக்க ரெட்டியார் புதல்வி சரஸ்வதிக்கும் இன்று காலை காஞ்சிபுரம் அஞ்சுகம் திருமண மண்டபத்தில் திருமணம் நடைபெற்றது. கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா இந்த மணவிழாவிற்குத் தலைமை தாங்கி திருமணத்தை நடத்தி வைத்தார்.

சரியாக 9.20 மணிக்கு செல்வி ஜெயலலிதா மணமக்கள் கையில் மாலைகளை எடுத்துக் கொடுத்து பின் மங்கல நாணை எடுத்து மணமகன் கையில் தந்து திருமணத்தை நடத்தி வைத்தார்.

செல்வி ஜெயலலிதா தலைமையில் நடைபெற்ற இந்த மணவிழாவிற்கு அமைச்சர் விஜய சாரதி வரவேற்புரையாற்றினார்.

கழக சட்ட மன்ற உறுப்பினர்கள் கோபால், சேதுராமன், விஸ்வநாதன், வெங்கடசுப்பிரமணியம் மற்றும் மாவட்ட கழக செயலாளர் ஏ. எம். ரகுநாதன், மாவட்ட எம். ஜி. ஆர். மன்றத்தலைவர் பாலாஜி, காஞ்சி பன்னீர் செல்வம், சி. பி. ராஜேந்திரன் காவனூர் பச்சையப்பன் ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசினர்.

காஞ்சி பன்னீர்செல்வம் செல்வி ஜெயலலிதாவுக்கு பட்டு சேலை பரிசு வழங்கினார்.

### நரிக்குறவ பெண்கள் ஆர்வம்

முன்னதாக செல்வி ஜெயலலிதா மணக்கூடம் வரும்போது மணமண்டபம் எதிரே 150க்கும் மேற்பட்ட நரிக்குறவர் பெண்கள் கூடி உற்சாகமாக ஆடிப் பாடி செல்வி ஜெயலலிதாவை வரவேற்றனர்.

### வீதி யெங்கும் தோரணங்கள், கழகக் கொடி

கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா காஞ்சிபுரம் வருவது இதுதான் முதல் தடவை. செல்வி ஜெயலலிதாவை வரவேற்கும் முகமாக காஞ்சி நகரே திருவிழாக்கோலம் பூண்டிருந்தது.

வீதியெங்கும் கழகக் கொடிகளுடன் கூடிய தோரணங்களும் வரவேற்பு வளைவுகளும் காட்சியளித்தன

*

## ஏப்ரல் 27 வரை சட்டசபை கூட்டம்

சென்னை, ஏப். 18 இம்மாதம் (ஏப்ரல்) 27 வரை தமிழக சட்டசபை கூட்டம் நடைபெறும்.

சட்டசபை துணை சபா நாயகர் பி. ச[illegible] பாண்டியன் இதை [illegible] சட்டசபையில் அறிவித்தார்.

---

அண்ணன் பிறந்த காஞ்சியில் 72 அடி உயர கொடிக் கம்பத்தில்

# கழகக் கொடியை ஏற்றி வைத்து செல்வி ஜெயலலிதா முழக்கம்

## பல்லாயிரம் மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம்

காஞ்சிபுரம், ஏப். 18- பல்லாயிரம் மக்கள் வாழ்த்தொலி முழக்கம் எழுப்ப பேரறிஞர் அண்ணா பிறந்த மண்ணில் காஞ்சித் திருநகரில் 72 அடி உயரக் கம்பத்தில் அண்ணாவின் உருவம் பொறித்த இரு வண்ணக்கொடியினை சிந்தனைச் செல்வி ஜெயலலிதா ஏற்றி வைத்தார்.

இந்தக் கொடி ஏற்று விழா காஞ்சிபுரம் இரட்டை மண்டபம் அருகே சிறப்போடு நடந்தது. விழாவுக்கு நகரச் செயலாளர் சி. பி. ராஜேந்திரன் தலைமை ஏற்றார். அமைச்சர் விஜய சாரதி மாவட்டச் செயலாளர் இரா. மோகனரங்கம் சட்டமன்ற உறுப்பினர் ஜி. விசுவநாதம் சட்டமன்ற முன்னாள் உறுப்பினர் பாலாஜி ஆகியோர் பேசினர்.

மாவட்ட எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் காஞ்சி பன்னீர்செல்வம் வரவேற்றார்.

72 அடி உயரக்கம்பத்தில் கழகக் கொடியினை ஏற்றி கொள்கைப் பரப்பு செயலாளர் சிந்தனைச் செல்வி ஜெயலலிதா பேசுகையில் குறிப்பிட்டதாவது:-

ஒவ்வொரு நாட்டினையும் குறிக்க கொடி உண்டு. உலக மன்றமாம் ஐ. நா. மன்றத்தின் முன்பு எத்தனையோ நாட்டுக்கொடிகள் பறக்கின்றன. அந்தக் கொடிகளில் இருந்தே உலக மன்றத்தில் எத்தனை நாடுகள் அங்கம் வகிக்கின்றன. என்னென்ன நாடுகள் அங்கம் வகிக்கின்றன என்பதனை தெரிந்து கொள்கிறோம்.

### கொடிகள் விளக்கம்

அசோக சக்கரம் பொறித்த மூவர்ணக் கொடியினைப் பார்த்தவுடனேயே இந்தக்கொடி இந்திய தேசியக் கொடி என்பதனைத் தெரிந்து கொள்கிறோம்.

நாடுகளைக் குறிக்கக் கொடிகள் இருப்பது போல லட்சிய இயக்கங்களைக் குறிக்க கொடிகள் இருக்கின்றன. நாட்டின் விடுதலையை லட்சியமாகக் கொண்டு காங்கிரஸ் இயக்கம் இயங்கிய போது கைராட்டினம் பொறித்த மூவண்ணக் கொடி. விடுதலை லட்சியக் கொடியாகப் பறந்து கொண்டிருந்தது நீதிக கட்சிக்கு தராசுச் சின்னம் பொறித்தக் கொடி இருந்தது.

நீதிக்கட்சியிலிருந்து தந்தை பெரியார் அவர்கள் திராவிடக்கழகத்தைத் தோற்றுவித்தார்கள்.

மக்களை மூடநம்பிக்கையிலிருந்து மீட்டு பகுத்தறிவு பெறச் செய்ய வேண்டும் என்ற லட்சிய நோக்கோடு தந்தை பெரியார் இயக்கம் கண்டார். அப்போது சுற்றிலும் கறுப்பினையும் மையத்தில் வட்ட வடிவில் செம்மையையும் கொண்ட கொடியினை லட்சியக் கொடியாக ஏற்றி வைத்தார்கள். மக்கள் மூடநம்பிக்கைகளிலிருந்துவிடு

(2-பக்கம் பார்க்க)

---

## காஷ்மீர் சட்டசபை கலைப்பு

ஜம்மு, ஏப். 18- ஜம்மு காஷ்மீர் சட்டசபை இன்று கலைக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

டுள்ளது.

காஷ்மீர் கவர்னர் பி.கே. நேரு இதற்கான உத்தரவை பிறப்பித்துள்ளார்.

காஷ்மீர் சட்டசபைக்கு 1977-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் தேர்தல் நடைபெற்றது.

மொத்தம் 76 உறுப்பினர்களைக் கொண்டது காஷ்மீர் சட்டசபை,

---

சபாநாயகர் அனுமதியை மீறி

# சட்டசபையில் தி.மு.க. எம்.எல்.ஏ. ரகுமான்கான் அடம்

## டாக்டர் நாவலர் கண்டனம்

சென்னை, ஏப். 18- விதிமுறைகளுக்கு முரணாக சபையில் பேசக்கூடாது என்று தி. மு. க. உறுப்பினர் ரகுமான்கானுக்கு அவை முன்னவர் கண்டனம் தெரிவித்தார்.

சட்டமன்றத்தில்கேள்வி நேரம் முடிந்ததும் தி. மு. க. உறுப்பினர் ரகுமான் கான் திடீரென்றுஎழுந்து ஒரு பிரச்சினையை கிளப்பினார். அதற்கு சபாநாயகர் அனுமதி மறுத்தார். என்றாலும் ரகுமான்கான் விடாமல் நான் பேசிவிடுகிறேன் என்று அடம் பிடித்தார்.

இவ்வாறு திடீரென்று எழுந்து பிரச்னையைக் கிளப்புவதை அனுமதிக்க முடியாது என்று சபாநாயகர் குறிப்பிட்டார்.

உறுப்பினர் ஒரு பிரச்னையைக் கிளப்பவேண்டுமானால் அதற்கு எத்தனையோ விதிமுறைகள் உள்ளன, அந்தவிதிமுறையின் கீழ் பேசவேண்டும். திடீரென்று எழுந்து எதையாவது கேட்பதை அனுமதிக்கக் கூடாது. ரகுமான்கான் கிளப்பிய பிரசனையை அவைக் குறிப்பிலிருந்து நீக்க வேண்டும் என்று அவைத் தலைவர் நாவலர் கூறினார்.

இதனைத் தொடர்ந்து ரகுமான்கான் கிளப்பிய பிரச்னையை அவைக் குறிப்பிலிருந்து நீக்குவதாக சபாநாயகர் ராசாராம் அறிவித்தார்,

# நமது மேடை

## 51-வது வட்டம்

சென்னை துறைமுகப் பகுதி 51வது வட்டம் மறுபிறவி எம்.ஜி.ஆர். மன்றம் சார்பில் கலா நிகழ்ச்சியும், கழகக் கூட்டமும் வரும் 20ந் தேதி மாலை 7 மணிக்கு ஆச்சாரப்பன் தெருவில் நடைபெறுகிறது.

எஸ். எம். கருணாநிதி தலைமையிலும் எம்.எஸ். மணி முன்னிலையிலும் நடைபெறும் இக்கூட்டத்தில் சென்னை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்ற செயலாளர் மதுசூதனன் மண்ணடி கிருஷ்ண. மூர்த்தி கு. கஜேந்திரபாபு, எம்.பி. ஆனந்தன் என்.ஏ. துரை கே. எல்லப்பன், எல். குமார், எஸ்.பி.டி. விஜயன், எஸ். ஜெகநாதன், எம்.வி. இளஞ்சேரன். முகவை தாஜுதின் ராஜேந்திரன், த. மனோகரன், கே.ஜி. சேகர், தேரடி கணேசன் கே. வி. ஜெயக்குமார், எம். ராமதாஸ், மற்றும் பலர் பேசுகின்றனர்.

இரவு 8 மணிக்கு காஞ்சி அண்ணாதாசனின் கலை நிகழ்ச்சியும் நடைபெறுகிறது.

## 111-வது வட்டம்

சென்னை வடபழனி 111-வது வட்டத்தின் சார்பாக கழகக் கூட்டமும், பொருளாளர் மாதவனுக்கு பாராட்டுக் கூட்டமும் நாளை மாலை 6 மணியளவில் மேற்கு சிவன்கோவில் தெருவில் நடைபெறுகிறது.

பெ. சந்திரசேகர் தலைமையிலும், எல். சௌந்தரராஜன் எ. எல். வெள்ளைச்சாமி வரவேற்பிலும், எம். ஜே. கான் முன்னிலையிலும் நடைபெறும் இக்கூட்டத்தில் கழக பொருளாளர் மாதவன், திருவை அண்ணாமலை, ச. அங்குசாமி, எம்.எல்.ஏ. கு.க. செல்வம், புலவர் இந்திரகுமாரி, தென்கோவன், தி. நகர் மூர்த்தி, சா. கோவிந்தசாமி, வி. கு. சச்சிதானந்தம் ஏ. லோகநாதன் கே. தட்சிணாமூர்த்தி, செ. சுந்தரம், து. மதிவாணன், கோ. வி. பரமசிவம், பா. முனுசாமி, எஸ். எம். துரையரசன், சு. சண்முகம், பி. தேவராஜ், சுப. நடராஜன், கே. கலியமூர்த்தி, ஏ. பி. வரதராஜன், சண்முகம், அ. பிரேமா, ச. ஏழுமலை, விவேகானந்தன், அண்ணா நாளிதழ் சக்தி மற்றும் பலர் பேசுகின்றனர்.

ஜெ. பிரகாஷ், ஏ.என். ராவ் நன்றி கூறுகின்றனர்.

## ஆவடி

ஆவடி 26வது வட்ட கழகக் கிளை சார்பாக நாளை மாலை 6.30 மணிக்கு ஆவடி கோவில் பதாகை நெடுஞ்சாலையில் கழகப் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

தா. அன்பழகன் தலைமையிலும், கி. மனோகரன் முன்னிலையிலும், பி. எஸ். ராஜ், எம். ராசாமணி, வரவேற்பிலும் நடைபெறும் இக்கூட்டத்தில் முத்துராமலிங்கம எம். எல். ஏ., என். வி. என். செல்வம், நாஞ்சில் மணிமாறன், பல குரல் காசிநாதன், புலவர் சோமுசா, ஆவடி குமார், ஏ. ஆர். கேசவன், கௌரிசங்கர் மற்றும் பலர் பேசுகின்றனர். அ. ச. துரை நன்றி கூறுகிறார்.

## நெல்லிக் குப்பம்

நெல்லிக்குப்பம் நெடுஞ்சாலை அண்ணா திடலில் வரும் 23 ந் தேதி மாலை 7 மணிக்கு கழகக் கூட்டம் நடைபெறுகிறது. சக்தி. சிவபூஷணம் தலைமையிலும், இரா. சிவராஜ், பாண்டுரங்கன், ஜலீல் முன்னிலையிலும் நடைபெறும் இக்கூட்டத்தில் ஐசரிவேலன், ஹீராசந்த் எம். பி. எம். ஏ. சண்முகம் எம். எல். ஏ. துரை அன்பரசன், வீரராகவன், சாரங்கபாணி, பக்கிரிசாமி, மாலிக், அமீது, வேணு மற்றும் பலர் பேசுகின்றனர். முகமது யூசுப் நன்றி கூறுகிறார்.

## திமிரி

திமிரி நகர கழகக் கிளையின் சார்பில் வரும் 20 ந் தேதி பிரமாண்டமான கழகப் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது தி. நா. தைனாக்கண்ணு தலைமையிலும், பி. கே. சுப்பிரமணியம் முன்னிலையிலும், தி. க. பெருமாள் வரவேற்பிலும் நடைபெறும் இக்கூட்டத்தில் கழகப் பொருளாளர் மாதவன், சோளிங்கர் மணி, ஏ. எம். சேதுராமன் எம்.எல்.ஏ. கே. ஜே. உய்ய கொண்டான் ஏ.எம். ரகுநாதன் காவனூர் பச்சையப்பன், பஜூமினி ராமச்சந்திரன், டி. ஆர். ஜெகதீசன் ஏ. பி. ஆறுமுகம், தி.க. ஜெயபாலன் த. பழனி, மு. குப்புசாமி, ஆர் எம. மன்னார், பெருமாள் தா.க. மூர்த்தி, முருகேசன். உமாபதி. கன்னிப்பிள்ளை மற்றும் பலர் பேசுகின்றனர். ஏகாம்பரம் நன்றி கூறுகிறார் அன்று. இரவு ஆரணி மறுமலர்ச்சி நாடக மன்றத்தாரின் சமுதாய சாக்கடை எனும் நாடகமும் நடைபெறுகிறது.

## புதுவை

புதுவையில் ஐசரிவேலன் தொடர்கூட்டங்கள்: 22-ம் தேதி வில்லியனூர் கனுவாய்பேட்டை 23-ம் தேதி ருத்ராபாளையம் 24-ம் தேதி உருளையன் பேட்டை 25-ம் தேதி சேதுனப்பட்டு

இந்தக் கூட்டங்களில் ஐசரிவேலன் பி கே. வலாநாதன் எம். ஏ. சண்முகம் மற்றும் பலர் பேசுவர்.

## சுங்குவார் சத்திரம்

திருப்பெரும்பூதூர் ஒன்றியப் சுங்குவார் சத்திரத்தில் 20ந் தேதி மாலை கழகக் கூட்டம் நடைபெறுகிறது.

டி. பி. கோவிந்தசாமி தலைமையிலும், செந்தாமரை முன்னிலையிலும் நடக்கும் இக் கூட்டத்தில் திருவை அண்ணாமலை. வண்ணை கோவிந்தன காஞ்சி பன்னீர் செல்வம் பிள்ளைப்பாக்கம் மூர்த்தி வி. மாரிமுத்து பா. சிதம்பரம் அகபர் அலி நடராஜன் போந்தூர் மணி குமாரவடிவேலு மற்றும் பலர் பேசுகின்றனர்.

---

சாலைப் போக்குவரத்து

# விபத்துகளை குறைக்க தீவிர நடவடிக்கை

## அமைச்சர் முத்துசாமி தகவல்

சென்னை, ஏப். 18. சாலை விபத்துக்களைக் குறைக்க அரசு பல்வேறு நடவடிக்கைகளை எடுத்து வருவதாக அமைச்சர் முத்துசாமி சட்டசபையில் தெரிவித்தார்.

சட்டப் பேரவையில் கேள்வி நேரத்தின் போது அமைச்சர் முத்துசாமி கூறியதாவது:-

1982-ம் ஆண்டு 21,086 சாலை விபத்துக்கள் ஏற்பட்டன. அவற்றில் 3686 பேர் உயிர் இழந்தனர்.

விபத்துக்களைக்குறைக்கும்பொருட்டு எல்லா கனரக ஊர்திகளுக்கும் வேகக் கட்டுப்பாடு இயந்திரம் பொருத்துமாறு அரசு ஆணையிட்டுள்ளது.

போக்குவரத்து சைகை காட்டி விளக்குப் பொருத்துதல், சாலைகளில் வேகத் தடை கட்டுதல், போக்குவரத்து குறிப்பு பலகை நிறுவுதல் மேம்பாலம் அமைத்தல் சாலை விதிகளை முமுரமாகக் கடைப்பிடிக்க காவல்துறையின் மூலமாக நடவடிக்கை எடுத்தல் போன்ற பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

போக்குவரத்துபேருந்துகளில் வேகக் கட்டுப்பாடு கருவிகள் பழுதடைந்தால் அதைச் களைய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

தனியார் பேருந்துகளில் இந்த கருவிகள் பொருத்த உத்தரவிட்டோம். அவர்கள் நீதிமன்றத்தில் தடை வாங்கியுள்ளனர். இதில் காலதாமதம் ஏற்பட்டுள்ளது. அரசு தேவையான நடவடிக்கைகளை எடுக்கும்.

### 30 ஆயிரம் வண்டிகள்

குடித்து விட்டு வண்டி ஓட்டுபவர்கள் மீதும் நடவடிக்கை எடுத்து வருகிறோம்.

தமிழகத்தில் 30 ஆயிரம் கனரக வண்டிகள் உள்ளன. இது இல்லாமல் வெளிமாநில வண்டிகளும் வந்து போகின்றன.

60000 பேருந்துகளில்மட்டும் வேகக் கட்டுப்பாடு கருவிகள் பொருத்தப் பட்டுள்ளன.

நீண்டதூரம் செல்லும் உறங்கும் வசதியுள்ள பேருந்துகளில் படுக்கை வசதிகளும் 16 பேர் அமரும் வகையிலும் இருக்கைகள் அமைக்கும்படி செய்ய ஆய்வு செய்து வருகிறோம்.

சென்னை, மதுரை, கோவை, போன்ற பெருநகரங்களில் நெரிசல் மிகுந்த நேரங்களில் சில முக்கிய இடங்களில் இரண்டு நடத்துநர்கள் நியமிக்கப் படுகின்றனர்.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

---

# செல்வி ஜெயலலிதா முழக்கம்...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

பட்டு தமிழர்களின் அவல நிலை நீங்கும்போது மையத்தில் உள்ள சிவப்பு நிறம் கறுப்பினை விழுங்கி முழுமையும் செம்மையாகும் என்று தந்தை பெரியார் அவர்கள் அவ்வப்போது விளக்கம் அளித்து வந்தார்கள்.

திராவிடர் கழகத்திலிருந்துபேரறிஞர் அண்ணா அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகம்கண்டார்கள். இரண்டு கழகங்களின் அடிப்படை லட்சியம் ஒன்றாகவே இருந்ததால் இரண்டு கழகங்களும் இரட்டைக் குழல் துப்பாக்கி என்று அண்ணா குறிப்பிட்டார்கள். ஆனாலும்திராவிடர் கழகத்திலிருந்து தி. மு. கழகத்தை வேறுபடுத்திக் காட்டிட மேலே கருப்பையும் கீழே சிவப்பையும் கொண்ட புதிய கொடியினை லட்சியக் கொடியாக உயர்த்திக் காட்டினார்கள்.

அண்ணா அவர்களின் மறைவுக்குப் பின்னால் தி.மு. கழகம் அண்ணா வின்பாதையிலிருந்து விலகிச் சென்றது. அவரது கொள்கை இலட்சியங்களிலிருந்து வெகுதூரம் விலகிச் சென்றது.

### காலம் தந்த பரிசு

திராவிடர் இயக்கத் திற்கே சோதனை ஏற்பட்ட நிலையில் மக்கள் அண்ணாவின் உண்மையான கழகத்தைக் காண விரும்பினார்கள். மக்களின் மன உணர்வுகளை அறியாத கருணாநிதி சர்வாதிகாரப் போக்கில் புரட்சித் தலைவர் அவர்களையே கழகத்தை விட்டு வெளியேற்றத் துணிந்தார். இதனை எதிர்த்து தமிழகமே ஆர்த்தெழுந்தது. அண்ணாவின் உண்மையான கழகம் கண்டு அதற்கு புரட்சித் தலைவரே தலைமை ஏற்க வேண்டும் என்று ஒருமித்த குரலில் கோரினார்கள். எனவேதான் காலத்தின் தேவையாக அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் பிறந்தது. இந்தக் கழகம்தான் அண்ணாவின் மெய்யான கழகம்- அவர் கொள்கை வழி நடக்கும் இயக்கம் என்பதனை எடுத்துக் காட்டிட 1972ம் ஆண்டு அக்டோபர் திங்கள் அமரர் அண்ணாவின் உருவம் பொறித்த இருவண்ணக் கொடியினை லட்சியக்கொடியாக புரட்சித்தலைவர் உயர்த்தினார்கள். இங்கே நான் ஏற்றிய லட்சியக் கொடி 1972-ம் ஆண்டு பிறந்தது என்பதைக் குறிப்பதற்குத் தானோ என்னவோ என்னை 72 அடி உயரக்கம்பத்தில் இந்தக் கொடியினை ஏற்றுமாறு பணித்திருக்கிறார்கள். இந்தக்கொடியினைக்காத்திட 1972-ம் ஆண்டு முதல் இன்று வரை எத்தனை எத்தனையோ பேர் தியாகம் செய்திருக்கிறார்கள் அவர்களுக்கெல்லாம் இந்தநேரத்தில் நாம்நமது நன்றியினைச் செலுத்த கடமைப்பட்டிருக்கிறோம்.

### உரிமைக்குரல் ஒலிக்கிறது

அறிஞர் அண்ணா அன்றைக்கு மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்று கோரினார். இதனையே பிரிவினைப் பேச்சு என்று அன்றைக்கு கருதியவர்கள் உண்டு. ஆனால் இன்றைக்கு எல்லா மாநிலங்களிலுமே மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்ற குரல் ஒலித்து வருகிறது புரட்சித்தலைவரின் குரல் முதல் குரலாக ஓங்கி ஒலித்து வருகிறது.

மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்பதனை வலியுறுத்த 1978—ம் ஆண்டு தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் தென் மாநில முதல்வர்கள் மாநாட்டினைக் கூட்டினார். இன்று அந்த அடித்தளத்திலிருந்து பெங்களூரில் நடைபெற்ற தென் மாநில முதல்வர்களின் மாநாட்டு தீர்மானங்கள் எழுந்து நிற்கின்றன.

மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்ற சிந்தனைக்கு— கோரிக்கைக்கு இனி எவராலும் வேலி போட முடியாது என்ற நிலை உருவாகி வருகிறது.

### நமது கோரிக்கை

மண்ணைக்காக்கும் அதிகாரம் மைய அரசிடம் இருக்கட்டும். மக்களைக் காக்கும் அதிகாரம் மாநில அரசுகளிடம் இருக்கட்டும் என்பது தான் நமது கோரிக்கையாகும்.

மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்பதற்காகவும் அன்றைக்கு அண்ணாவின் உருவம் பொறித்த இருவண்ணக்கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருக்கிறது.

இவ்வாறு சிந்தனைச் செல்வி ஜெயலலிதா கூறினார்.

---

சுலோசனா சம்பத் பாராட்டு

# தமிழ் நாட்டில் பஞ்சாபியர் சங்க கல்வித் தொண்டு

சென்னை, ஏப். 18. சென்னை நகரில் பஞ்சாப் அசோசியேஷன் நல்ல கல்வித் தொண்டினை செய்துவருகிறது என்று சுலோசனாசம்பத் பாராட்டு தெரிவித்தார்.

எம். ஜி. ஆர். நகரில் பஞ்சாப் அசோசியேஷன் 'அண்ணா ஆதர்ஷ் இன்ஸ்டிடியூட் ஆப் எலக்ட்ரானிக்ஸ்' துவக்க விழாவில் குடிசை மாற்று வாரியத் தலைவர் சுலோசனா சம்பத் பேசும்போது கூறியதாவது:-

பேரறிஞர் அண்ணா ஒரு கருத்தை மிக வலியுறுத்துவார். தமிழர்கள் அவர்கள் பிழைப்புக்காக பிற மாநிலங்களில் குடியேறினாலும் அண்டை நாடுகளில் வசித்தாலும், அவர்கள் தாங்கள் வாழுகிற பகுதிகளில் அந்த மாநிலங்களுக்கு விசுவாசமாக, அந்த மக்களோடு மக்களாக ஒன்றிப் போய் விட வேண்டும் என்று குறிப்பிடுவார்.

இந்தக் கருத்து எல்லா மக்களுக்கும் பொருந்தும், அவ்வகையில் சென்னையில் வாழுகிற பஞ்சாப் மக்கள், தமிழ்மக்களோடு ஒன்றிணைந்து நம் சகோதரர்களாக, சகோதரிகளாகப் பழகி இணைந்து வாழுகிறார்கள்.

### முதல்வரின் பெருந்தன்மை

கல்விப் பணிக்கு ஆற்றிடும் அரிய சேவையாக பஞ்சாப் அசோசியேஷன், சென்னை-கிண்டி அருகே குருநானக் கல்லூரியை செவ்வனே நடத்தி, சாதி, மத பேதங்களுக்கு இடம் தராமல், எண்ணற்ற தமிழ் இளைஞர்களை ஆண்டுதோறும் பட்டதாரிகளாக உருவாக்கி வருகிறது.

இக்கல்லூரியின் விரிவாக்கத்திட்டத்திற்காகத் தமிழக அரசு 20 ஏக்கர் நிலத்தை அளித்திருக்கிறது என்றும் இங்கே அருகில் தியாகராயநகர் ஜி.என். செட்டிசாலையில் குருத்வார் சாஹிப் நினைவாலையத்தை அமைத்திட நகரத்தின் மிக மையப்பகுதியான அங்கே புரட்சித்தலைவர் அரசு ஒரு ஏக்கர்நிலத்தை ஒதுக்கித் தந்திருக்கிறது என்றும் இச் சங்கம் பாராட்டியுள்ளதை இச்சந்தர்ப்பத்தில் நான் குறிப்பிட கடமைப்பட்டுள்ளேன்.

தமிழகத்தின் மறைந்த புகழ்பெற்ற தலைவர்களின் பெயரிலே பல சமூகநலநிலையங்களைத் துவக்கி நடத்துகிற பஞ்சாப் அசோசியேஷன்— சமீபத்தில் சென்னை அண்ணா நகரில் பேரறிஞர் அண்ணா அவர்களின் பெயரில் அண்ணா ஆதர்ஷ் ஹையர் செகண்டரி பள்ளி ஒன்றை நிறுவிட குடியரசுத் தலைவர் ஜைல்சிங்கை அழைத்து, முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களது தலைமையிலே அடிக்கல் நாட்டு விழாவினை நடத்தியுள்ளனர். இது பஞ்சாபியர்களான இவர்களுக்கு பேரறிஞர் அண்ணா மீதுள்ள பற்று பாசத்தைக் காட்டுவதாகும்.

### முதல்வர் பெயரில்

இதுபோலவே சென்னை, எம்.ஜி ஆர். முதல்வர்புரட்சித் தலைவரின் பெயராலே எம். ஜி. ஆர். ஆதர்ஸ் எலக்ட்ரானிக்ஸ் இன்ஸ்டிடியூட் என்ற நிறுவனத்தை ஏற்படுத்தும் பணிகளை அசோசியேஷன் நிறைவேற்றி வருகிறது. மகளிர் முன்னேற்றத்திற்கு முக்கியத்துவம் அளித்திடும் அசோசியேஷன், இந்த எலக்ட்ரானிக்ஸ் நிறுவனத்தை மகளிருக்காகவே நடத்த முன் வந்திருப்பது பாராட்டத்தக்கதாகும்.

### தமிழ் கலை ஆர்வம

இவர்கள் பஞ்சாபியர்கள் என்றாலும், இவர்கள் நடத்துகிற பள்ளிகளில் தமிழுக்கு முதல் முக்கியத்துவம் தந்து, தமிழ்க்கலைகளை பரப்புவதல் ஆர்வம் காட்டுகின்றனர்.

இந்த அசோசியேஷன் நடத்துகிற ஆதர்ஷ் கல்விக்கூடத்தில் நடந்த ஆண்டு விழாவில் மிகுந்த பொருட்செலவோடு சிலப்பதிகாரக் கண்ணகி நாடகத்தை மாணவச் செல்வங்களை நடிக்க வைத்து பாராட்டத்தக்க விதத்தில் நடத்தியிருக்கின்றனர்.

### சத்துணவு நன்கொடை

தங்களுடைய அரிய முயற்சிகளில் இவர்கள் பல கல்வி நிலையங்களை நடத்தினாலும், ஏழைக் குழந்தைகள் கல்வியோடு சத்துணவும் பெற்று ஆரோக்கியமாகத் திகழ புரட்சித்தலைவர் அரசு அமுல்படுத்தி வரும் இலவச மதிய சத்துணவு திட்டத்திற்கு இந்த அசோசியேஷன் 25,000 ரூபாய் நன்கொடைவழங்கி உள்ளமைக்கும் நான் இந்த அசோசியேஷனுக்கு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

இவ்வாறு சுலோசனா சம்பத் கூறினார்.

---

# பூலான் தேவிக்கு 3 ஆண்டு கடுங்காவல் தண்டனை

பிந்த் (ம.பி.) ஏப் 18— நாட்டையே நடுங்க வைத்த பிரபல கொள்ளைக்காரியான பூலான் தேவிக்கும் அவளது காதலன் மான்சிங்கிற்கும் கடுங்காவல் தண்டனை விதித்து நீதிபதி ஜெயின் தீர்ப்பு கூறினார்.

ஆயுத சட்டம், இந்திய பீனல்கோடு மற்றும் மத்தியப்பிரதேச கொள்ளை தடுப்பு சட்டத்தின் கீழ் விசேஷ கோர்ட்டில் இந்த இருவர் மீதும் வழக்குகள் தாக்கல்செய்யப்பட்டிருந்தன. குற்றங்களை இருவரும் ஒப்புக்கொண்டனர். பல்வேறு குற்றங்களுக்காக இரு வருடம், 3 வருடம், 3மாத கடுங்காவல் என்று சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. தண்டனையை ஏக காலத்தில் அனுபவிக்க வேண்டுமென்றும் நீதிபதிஜெயின் உத்தரவிட்டார். இவர்களைச் சார்ந்த மற்ற கொள்ளைக்காரர்கள் மீது வழக்குகள் இன்னும் விசாரிக்கப்படவில்லை.

---

# சென்னைக்கு கிருஷ்ணா நதி நீர்...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

யும் அளவுக்கு முந்திய ஆட்சியாளர்கள் பேசிப் பேசியேவந்தனர். ஆனால் அந்தத் திட்டம் புரட்சித் தலைவர் ஆட்சியில் நிறைவேறுகிறது. நினைத்ததை முடிப்பவர் ஆட்சியில் நிறைவேறுகிறது.

இன்னும் இருபது ஆண்டுகளுக்குப் பின்னால் சென்னை மாநகரின் வளர்ச்சி எப்படி இருக்கும் மக்கட் தொகைப் பெருக்கம் எந்த அளவுக்கு உயர்ந்திருக்கும் என்பதைக் கணித்து கிருஷ்ணா நதிநீர் திட்டத்தை செயல்படுத்துவதில் புரட்சித்தலைவர் தீவிரம் காட்டி வந்தார். ஆனால் ஆந்திரமாநிலத்தில் அடிக்கடி ஏற்பட்ட ஆட்சி மாற்றங்களால் இந்த முயற்சி தாமதமாகிக் கொண்டே வந்தது.

குடிநீர் திட்டங்களுக்கு முதன்மை அளித்துவரும் புரட்சித் தலைவர் தொடர்ந்து இந்தத் திட்டத்தைச் செயல் படுத்துவதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்ததால் கிருஷ்ணாநதிநீர் உடன்பாடு கையெழுத்தாகிறது.

---

இந்திய துணைக்கண்டத்தில்

# பட்டினி சாவு எங்கும் இல்லை

புதுடெல்லி, ஏப். 18— இந்திய துணைக் கண்டத்தில் எந்த இடத்திலும் பட்டினிச்சாவு ஏற்படவில்லை என்று நாடாளுமன்றத்தில் மத்திய விவசாயத்துறை அமைச்சர் ராவ்பீரேந்திர சிங் கூறினார்.

உண்ண உணவு இல்லாமல் எந்த இடத்திலும் பட்டினிச்சாவு ஏற்பட்டதாகத் தகவல் எதுவும் கிடையாது என்றும்அவர் தெரிவித்தார்.

---

# வெற்றிகரமாக பூமியை வலம் வரும் ரோகிணி செயற்கைகோள்

பெங்களூர், ஏப். 18— ஸ்ரீஹரிகோட்டா விண்வெளி தளத்தில் இருந்து நேற்று விண்வெளியில் செலுத்தப்பட்ட எஸ். எல்.வி 3 "ரோகிணி-2" செயற்கைக் கோள் பூமியை வெற்றிகரமாக சுற்றிக்கொண்டிருக்கிறது.

பூமிக்கும் சுமார் 438 கிலோமீட்டர் உயரத்தில் சுற்றிக் கொண்டிருக்கும் 40 கிலோ எடையுள்ள இந்த ரோகிணி விண்வெளிக்கலம் ஏற்கனவே விஞ்ஞானிகள் அறிவித்தபடி சமிக்ஞைகளை பூமிக்கு அனுப்பிக்கொண்டிருக்கிறது.

"ரோகிணி" அனுப்பும் சமிக்ஞைகளை பெங்களூர் திருவனந்தபுரம் பீன்யா ஆகிய இடங்களில் உள்ள விண்வெளி செயற்கை கோள் தரைக்கட்டுப்பாடு நிலையங்களில்பதிவுசெய்யப்படுகின்றன.

ரோகிணி விண்வெளிக் கலத்தில் உள்ள எல்லா உறுப்புகளும் குறிப்பிடத்தக்க வகையில் சிறப்பாக இயங்கி வருகின்றன என்று பெங்களூர் விண்வெளிஆராய்ச்சிநிலையம் ஐ. எஸ். ஆர். ஓ. தெரிவித்துள்ளது.

விண்வெளியில் செலுத்தப்பட்டது முதல் கடந்த 24 மணி நேரத்தில் ரோகிணி 15 முறை பூமியை வலம் வந்துள்ளது.

---

# பிரதமர் டெல்லி பயணமானார்

சென்னை: ஏப். 18— ஸ்ரீ ஹரிகோட்டாவில் நேற்று காலை விண்வெளியில் எஸ். எல். வி. 3. ராக்கெட் ஏவப்பட்டதை நேரில் பார்த்த பிரதமர் பிற்பகல் 2.35க்கு ஹெலிகாப்டர் மூலம் மீனம்பாக்கம் வந்தார்.

விமான நிலையத்தில் 20 நிமிட நேரம் தங்கியிருந்த பிரதமர் சுமார் 3 மணிக்கு இந்திய விமானப்படை விமானம் மூலம் புதுடெல்லி பயணமானார்.

விமான நிலையத்தில் பிரதமரை ஆளுநர் குரானா, முதல்வர் புரட்சித் தலைவர், தலைமை நீதிபதி பொறுப்பிலுள்ள கோகுலகிருஷ்ணன், அமைச்சர்கள், தலைமை செயலாளர் பொறுப்பிலிருக்கும் கே. சொக்கலிங்கம டி. ஜி. பி. ராதாகிருஷ்ணன் உட்பட பலர் வழியனுப்பி வைத்தனர்.

---

# குமரி மாவட்ட மன்ற நிர்வாகிகள் கூட்டம்

நாகர்கோவில், ஏப். 18. குமரி மாவட்ட அனைத்து எம். ஜி. ஆர். மன்றங்களின் நிர்வாகிகள் கூட்டம் 21-ம் தேதி மாலை 4 மணிக்கு ஆசாத் லாட்ஜில் நடைபெறுகிறது.

கே. பன்னீர்செல்வம் தலைமை வகிப்பார். தமிழ் மகன் உசேன் முன்னிலை வகிப்பார்.

28, 29, 30 தேதிகளில் குமரி மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்ய இருக்கும் முறிசியார் வரவேற்புக்கானஏற்பாடுகள் குறித்து முடிவு செய்ய கூட்டப்பட்டுள்ளது.

---

கோலாரில் அமைச்சர்

# முத்துசாமியிடம் அளித்த சத்துணவு நன்கொடை

பெங்களூர், ஏப். 18— கோலார் தங்கவயல் வந்த அமைச்சர் முத்துசாமியிடம் எம். சாமிக்கண்ணும் என்பவர் சத்துணவு நிதியாக ரூ. 21 வழங்கினார்.

கோலார் தங்கவயல் கழக எம். எல். ஏ. பக்தவத்சலம் இல்லத் திருமணத்தில் அமைச்சர் முத்துசாமி கலந்து கொண்டார்.

பிறகு கழக பொதுக் கூட்டத்திலும கலந்து கொண்டு பேசினார்.

சத்துணவு திட்டத்தில்

# சிக்கல் உண்டாக்கவே மைய அரசு போதிய அரிசி தரவில்லை

## ஆற்காடு சேதுராமன் குற்றச்சாட்டு

**சென்னை, ஏப் 18- சத்துணவு திட்டத்தில் சிக்கல் உண்டாக்க வேண்டும் என்ற எண்ணத்தில் மைய அரசு தமிழகத்திற்கு போதிய அரிசியைத்தர முன் வரவில்லை என்று ஆற்காடு சேதுராமன் குற்றஞ்சாட்டினார்.**

சட்டசபையில் ஆற்காடு சேதுராமன்பேசுகையில் கூறியதாவது:-

வறட்சி நிலைமையிலும் அரசு மக்களுக்கு நல்ல பணிகளைச் செய்து வருகிறது. இதனால் மக்கள் மகிழ்ச்சி அடைந்து வருகிறார்கள். உலகமே போற்றும் வகையில் சத்துணவுத் திட்டம் தமிழகத்தில் நடந்து வருகிறது. அந்தத் திட்டத்தில் சிக்கல் உண்டாக்க வேண்டும் என்றஎண்ணத்தினாலோ என்னவோ அரிசி கொடுக்கவில்லை என்று எண்ணத்தோன்றுகிறது.

உணவுப்பிரச்சினையில் மத்திய அரசு சற்று அதிக கவனம் கொண்டு தமிழகத்தின்மீது பற்றும் பாசமும் வைக்க வேண்டும். வேறு எந்த நோக்கமாக இருந்தாலும் அதை இந்த நேரத்தில் வைத்துக் கொள்ளக்கூடாது. ஒரு குவிண்டால் நெல்லுக்கு 122 ரூபாய் என்று விலை நிர்ணயம் செய்துகொடுக்கிறார்கள்.

ஆனால் அதே நேரத்தில் கோதுமைக்கு 175 ரூபாய் கொடுக்கிறார்கள் கோதுமைக்கு கொடுக்குமளவுக்கு கொடுக்கமனம் வராவிட்டாலும் நெல்லுக்கு 150 ரூபாயாவது கொடுக்க உத்தரவிட வேண்டும்.

இவ்வாறு ஆற்காடு சேதுராமன் கூறினார்.

அட்வகேட் ஜெனரல் மகன் திருமணம்

## கவர்னர், முதல்வர் வாழ்த்து

சென்னை, ஏப். 18— தமிழ்நாடுஅரசு தலைமை வக்கீல் (அட்வகேட்ஜெனரல்) ஆர். கிருஷ்ணமூர்த்தியின் மகன் சுந்தரேசுவரனுக்கும், இலங்கை ஏ. ராமநாதன் புதல்வி ஈஸ்வரிக்கும் சென்னை ஏவி. எம். ராஜேசுவரி திருமண மண்டபத்தில் நேற்று காலை திருமணம் நடைபெற்றது.

முதல்வர் புரட்சித் தலைவர் தன் துணைவியாருடன் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினார். அமைச்சர் பொன்னையன் மற்றும் நீதிபதிகள், சட்டமன்ற உறுப்பினர்கள் கே. ஆர். கணபதி, ஆறுமுகம், வி.வி. சாமிநாதன் ஆகியோரும் மணவிழாவிற்கு வந்திருந்தனர்.

மாலையில் நடந்த வரவேற்பில் ஆளுநர் குரானா அமைச்சர்கள் கே.ஏ.கே, எஸ்.டி.எஸ்., ஆர்.எம்.வீ அரங்கநாயகம், திருநாவுக்கரசு, அண்டே மற்றும் செரீப் சிவந்தி ஆதித்தன், டி.ஜி. ப. ராதாகிருஷ்ணன், திரைப்பட இயக்குனர் ஸ்ரீதர், நடிகர் கார்த்திக் உட்பட திரளானோர் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

இந்தியாவிலேயே

# தமிழகத்தில்தான் சிறந்த போக்கு வரத்துக் கழகங்கள்

## மொடக்குறிச்சி பாலகிருஷ்ணன் எம். எல். ஏ. பாராட்டு

**சென்னை, ஏப். 18- இந்தியத்துணைக் கண்டத்தில் தமிழகத்தில் தான் மிகச் சிறந்த வகையில் போக்குவரத்துக் கழகங்கள் செயல்படுகின்றன என்று சட்டசபையில் பாலகிருஷ்ணன் எம். எல் ஏ. பாராட்டினார்.**

சட்ட சபையில் கழக உறுப்பினர் மொடக்குறிச்சி எஸ். பாலகிருஷ்ணன் பேசுகையில் கூறியதாவது:-

தென் மாநிலங்களில் குறைந்த கட்டணத்தில் தரத்தில் மிக உயர்ந்த பேருந்துகளை நடத்தி வருவது புரட்சித்தலைவரின் தமிழக அரசுதான் என்பதைப் பெருமையோடுசொல்லிக்கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன் தமிழகத்தில் போக்குவரதுத் துறையில் இது பொற்காலம் என்று சொன்னால் நிச்சயமாக அது மிகையாகாது.

இந்தியத் துணைக் கண்டத்தில் சிறந்த முறையில்நிர்வகிக்கப்படுவதும், சிறந்த பேருந்துகளைக் கொண்டிருப்பதுமான போக்குவரத்துக் கழகங்களால் அதிகமான வழித்தடங்களில் மக்களுக்கு சேவை செய்து வருகிற சிறப்பினைப் பெற்றுள்ளது, தமிழக அரசு நடத்தும் போக்கு வரத்துக் கழகங்கள் தான் என்பதை இந்தியாவில் இருக்கிற அனைத்து மாநிலங்களும் ஏற்றுக்கொண்டிருக்கின்றன.

டீசல் விலை அதிகமாக இருந்தும் நீண்டகாலமாக கட்டண உணர்வு இல்லாமல மக்கள் நலனைக் கருதது கொண்டு தமிழக முதலமைச்சரும், போக்குவரதது அமைச்சரும பேருநதுகளை நடத்தி வருவதை ஏழை எளிய மககள் சார்பில் நான் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன்.

### எடுத்துக்காட்டாக இருக்கிறது

அண்மையில் நடைபெற்ற ஆசிய விளையாட்டுப் போட்டிகளிலே மைய அரசின் வேண்டுகோளுக்கிணங்க ஏறத்தாழ 50—க்கும் மேற்பட்ட பேருந்துகளுக்கான கூண்டுகளை உலக நாடுகளிலிருந்து வருகின்றவர்களைக் கவருகின்ற வகையிலே அமைத்துக்கொடுத்து டெல்லி மாநகருக்கு அனுப்பியதை அனைவரும் அறிவார்கள்.

பயணிகளுக்குப் பல வகைகளிலும் சிறப்பாகப் பணியாற்றும் போக்குவரத்துக் கழகங்கள் தன்னுடைய பணியாளர்கள் நலத்திலே நாட்டமும அக்கறையும கொண்டு சிறப்புமிக்க பல்வேறு திட்டங்களையும நடைமுறைப்படுத்து முனைப்போடு செயலாற்றி வருகிறது. எந்த மாநிலத்திலும் இல்லாத அளவுக்கு நமது மாநிலத்

5-ம பக்கம் பார்க்க

# சாலை விபத்துக்கள்: மேலும்2மாவட்டத்தில் சிகிச்சைப் பிரிவுகள்

## அமைச்சர் அண்டே அறிவிப்பு

**சென்னை, ஏப். 18- சாலை விபத்துக்களால் பாதிக்கப்படும் நபர்களுக்கு உடனடியாக அவசர சிகிச்சை அளிப்பதற்கான சிகிச்சைப் பிரிவுகள் தமிழகத்தில் மேலும் 2 மாவட்டங்களில் ஏற்படுத்தப்படவிருக்கின்றன என்று அமைச்சர் டாக்டர் அண்டே தெரிவித்தார்.**

விபத்துக்கள் வன்முறை சம்பவங்களால் பாதிக்கப்பட்டு படுகாயம் அடைவோருக்கு சிகிச்சை, மற்றும் பாதுகாப்பு அளிப்போர் சங்கத்தின் சார்பில் சென்னையில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றில் மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் டாக்டர் அண்டேகலந்துகொண்டு பேசினார்.

அவர் கூறியதாவது:

"சாலை விபத்துக்களில் படுகாயம் அடைந்தோர், சில நேரங்களில் உயிர் இழக்கவும் நேரிடுகிறது. பாதிக்கப்பட்டோர்களுக்கு உடனடியாக சிகிச்சை அளிக்க வேண்டும். படுகாயம் அடைந்தவர்களுக்கு ரத்த இழப்பு அதிக அளவில் ஏற்படுவதால் அவர்கள் பெரிதும பாதிக்கப்படுகிறார்கள்.

சாலை விபத்துக்களால் படுகாயம் அடைந்தவர்களுக்கு உடனடி அவசர சிகிச்சை அளிக்கும் மருத்துவப் பிரிவுகள் தற்போது தமிழகத்தில 10 மாவட்டங்களில் ஏற்படுத்தப்பட்டுள்ளன. காயம் அடைந்தவர்களை உடனடியாக ஆம்புலன்ஸ் வண்டியில் அருகாமையில் உள்ள மருத்துவமனைகளுக்கு எடுத்துச் செல்லும் ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன.

இந்தத் திட்டம் கடந்த 1979 ஆம் ஆண்டில் துவங்கப்பட்டது. இந்த ஆண்டு செங்கல்பட்டு, தர்மபுரி ஆகிய 2 மாவட்டங்களிலும இப்படிப்பட்ட உடனடி சிகிச்சைப் பிரிவுகள அமைக்கப்படவிருக்கின்றன.

அடுத்த ஆண்டு புதுக்கோட்டை, தஞ்சாவூர், வடஆற்காடு ஆகிய மாவட்டங்களில் இந்த விசேஷ மருத்துவ சிகிச்சைப் பிரிவுகள் ஏற்படுத்தப்படும். சாலை விபத்துக்களில் காயம் அடைந்து அவதிக்குள்ளாகும் நபர்களுக்கு போதிய அவசர சிகிச்சைகள் உடனடியாக அளிப்பதில் கழக அரசு தீவிர கவனம் செலுத்தி வருகிறது.

இவ்வாறு அமைச்சர் டாக்டர் அண்டே கூறினார்.

(6-ம் பக்கத்தொடர்ச்சி)

திலே அரசு போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கு ஊதியம் மற்றும் சலுகைகள் அளிக்கப்பட்டுள்ளன உதாரணத்திற்கு ஒன்றிரண்டை நான் இங்கே குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகிறேன், அகவிலைப் படி, வட்டு வாடகைப் படி, நகர சட்டுப்படி, கிராமப் படி மருத்துவ வசதி, விடுப்பு, மருதது வப்பயன்கள் முதலியவை அனைத்துப போக்குவரத்துக் கழகங்களிலும ஒரே சீராக்கப்பட்டுள்ளன.

### மாவட்ட குழு

தொழிலாளர்களின் பிள்ளைகள் பள்ளிகளுக்கும், கல்லூரிகளுக்கும் இலவசமாக பயணம் செய்யலாம் என்பதைப் பொறுத்தவரையில் தொழிலாளருக்கு எத்தனை பிள்ளைகள் இருந்தாலும் அவர்கள் அத்தனை பேர்களுக்கும் இந்தச் சலுகையை அளித்திடவேண்டுமென்று இந்த நேரத்தில் நான் கேட்டுக் கொள்கிறேன்.

புதிய பேருந்து வழித்தடங்களை உருவாக்குவதற்காக ஒவ்வொரு மாவட்டத்திலேயும் குழுக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்த மாவட்டக் குழுக்களிலே சட்ட மன்ற உறுப்பினர்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

ஆட்டோ ரிக்ஷாவில் மூன்று பேர்களை ஏற்றிக் கொண்டு செல்வதற்கான அனுமதியை இந்த அரசு செய்து கொடுத்தால் ஏழை, எளிய மக்கள் இந்த அரசைப் பாராட்டுவார்கள். வரவேற்பார்கள்,

இவ்வாறு பாலகிருஷ்ணன் கூறினார்.

தமிழ்நாட்டில்

# தண்ணீர் தட்டுப்பாடு: மைய அரசின் கவன குறைவே காரணம்

## சட்டசபையில் அண்ணாதாசன் பேச்சு

**சென்னை, ஏப் 18 பக்ரா நங்கல்போன்ற திட்டங்களை செயல்படுத்திய மைய அரசு தமிழகம பற்றி சரியாக சிந்தித்து இருந்தால் இந்த தண்ணீர் தட்டுப்பாடு வந்திராது என்று சட்டசபையில் அண்ணாதாசன்குறிப்பிட்டார்**

சட்டசபையில் கழக உறுப்பினர் திருவெறும்பூர் அண்ணாதாசன் பேசுகையில் கூறியதாவது:

நீர்ப்பாசனத் துறையைப் பொறுத்தவரைக்கும் தமிழ்நாட்டிலே இன்றைக்கு காவிரிப் பிரச்னையை எடுத்துக கொண்டால் கர்நாடகத்தினுடைய தண்ணீர் நமக்கு கிடைக்க முடியாத சூழ்நிலை இருககிறது, பல ஆண்டுகளுக்கு முன்னாலே இருந்த பல முதல் அமைச்சர்கள திறமையான வர்களும் ஆண்டிருக்கிறார்கள். தமிழ்நாட்டை ஆரம்பக் கட்டததிலே, சுதந்திரத்திற்குப் பிறகு ஆண்டவர்கள். இன்றையதினம் மத்திய சர்க்காரிலே ஆண்டுகொண்டிருக்கிறவர்கள் காங்கிரஸ் கட்சிக்காரர்கள் தான். தேசியவாதிகள் தான்.

இவ்வளவு பெரிய ஆட்சிப் பீடத்திலே இருந்தவர்கள் இந்த தமிழ் நாட்டின் மேல் அக்கறை காட்டி இருந்து இருப்பார்களேயானால், வடபுலத்திலே பெரிய நதிகளை எல்லாம் ஒ— விட்டு, பக்ராநங்கல் போன்ற பெரிய அணைக் கட்டுகளை அங்கே உருவாக்கி கிட்டத்தட்ட 3,4 மாநிலங்கள் செழிப்புறறு வளர்வதற்கு ஏற்பாடு செய்த கால கட்டத்திலே அவர்கள் இந்த தமிழகத்தைப் பற்றி ஒரு கணம சிந்தித்துப் பார்த்திருப்பார்களேயானால் இன்றைக்கு தண்ணீர் தண்ணீர் என்று கர்நாடக அரசை நாம் கையேந்தி நிற்க வேண்டிய அவல நிலை வந்திருக்காது.

### கழக ஆட்சியில் புதிய திட்டங்கள்

தமிழகத்தில் புரட்சித் தலைவர் ஆட்சிக்கு வந்த பிறகு ஏறத்தாழ ஒவ்வொரு மாவட்டத்திற்கும் மாவட்ட ரீதியாகப் பார்த்து, பல இடங்களில் சிறு நீர்த்தேக்கங்களை உருவாக்கி மழைக காலங்களில் வரும நீரை அதில தேக்கம் செய்து, அந்தந்தப் பகுதிகளில் உள்ள மக்களுக்கு பயன்படுததக் கூடிய வகையில் திட்டங்களைத் தீட்டி செயல்படுதது வருகிறார்கள். அதற்கு ஒரு எடுத்துக்காட்டு சொல்ல விரும்புகிறேன். நடப்பு ஆண்டில் திருச்சி மாவட்டத்தில் 1½ மாதத்திற்கு முனபு ஜெயங்கொண்டம் தாலுக்காவில் சித்தமல்லி என்ற இடத்தில ஒரு நீர்த்தேகத்தைக் கட்டுவதற்குநீர்ப்பாசனத துறை அமைச்சர் காலகோள நாட்டியிருக்கிறார் அதைப் போலவே ஆயக்குடி என்ற இடத்தில திட்டத்தை நிறைவேற்றுவதற்கும் கால்கோள் விழா நடத்தப்பட்டுள்ளது. இப்படி இன்னும பல்வேறு இடங்களில் திட்டங்கள் தீட்டப்பட்டு இருக்கின்றன அதற்காக இந்த அரசுக்கு என பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னுடைய தொகுதியில் உள்ள குடிநீர் பிரச்னையை குடிநீர் வடிகால் வாரியத்தின் மூலம் தனி ஆய்வு செய்து அதற்காக தனியான ஒரு திட்டம ஏற்படுத்தி அந்த பற்றாக குறையைப் போக்க வேண்டும என்று கேட்டுக கொள்கிறேன். என்னுடைய தொகுதியில் இருக்கும் ஏரிகள், குளங்கள் எல்லாம தூர்ந்துபோய் இருக்கின்றன, அவற்றை ஆழப்படுத்த வேண்டும.

இவ்வாறு அண்ணாதாசன் கூறினார்.



காலநடை உதவி மருத்துவர்கள் சங்கத்தின சார்பாக சத்துணவுத் திட்டத்திற்கு முதல்வர் புரட்சித்தலைவரிடம் 25 ஆயிரம் ரூபாயை சங்கச் செயலாளர் தண்டாயுதபாணி அளித்தார்.

மொழிப்போரில் ஈடுபட்ட

# தியாகிகளுக்கு உதவ கழக அரசு தக்க முடிவை எடுக்கும்

அமைச்சர் எஸ். டி. எஸ். அறிவிப்பு

**சென்னை, ஏப். 18- மொழிப் போரில் ஈடுபட்ட தியாகிகள் தமிழகத்தில்தான் உள்ளனர். இவர்களுக்கு உதவி அளிப்பது பற்றி கழக அரசு தக்க முடிவை எடுக்கும் என்று அமைச்சர் எஸ். டி. எஸ். அறிவித்தார்.**

சட்டப் பேரவையில் கேள்விநேரத்தின் போது வருவாய்த் துறை அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறியதாவது:—

கூடுதல் விற்பனை வரியை ரத்து செய்ய வேண்டுமென்ற தமிழ் நாடு வர்த்தக சபையினர் வேண்டுகோள் அரசின் பரிசீலனையில் இல்லை.

இதனை ஏற்றால் ஆண்டுக்கு ஏறக்குறைய 37 கோடி ரூபாய் நஷ்டம் ஏற்படும். இதனால் இதை ஏற்பதற்கு இல்லை.

அரசிற்கு வரும் வரி வருமானத்தை ஏமாற்றுவதைக் கண்டு பிடிக்க தீவிர நடவடிக்கைகள் எடுக்கப் படுகின்றன. இதில் தவறு செய்யும் அதிகாரிகள் மீதும் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகிறது. பலரை வேலை நீக்கமும்செய்துள்ளோம்.

திருப்பூர் பனியன் தொழிற்சாலை மற்ற மாநிலங்களிலுள்ள பனியன் தொழிற் சாலைகளோடு தொழிலில் போட்டியிடுவதில் சங்கடம் இருந்தால் அதை நீக்க அரசு ஆராயும்.

அரசால் வீட்டுமனைப் பட்டா வழங்கும்போது வீட்டு மனைப் பட்டா பெறும் ஒவ்வொரு நபருக்கும் ஒரு [illegible] தென்னங்கன்று இலவசமாக வழங்க அரசு உத்தரவிட்டுள்ளது.

நடப்பு ஆண்டு ஜனவரி வரை 10 ஆயிரத்து 328 பேருக்கு இலவச வீட்டு மனைப்பட்டா கொடுத்திருக்கிறோம்.

ராணுவத்தில் இறந்தவர் குடும்பத்திற்கு, நில மற்ற ஆதி திராவிடர் குடும்பங்களுக்கு, கொத்தடிமைகளுக்கு, முன்னாள் எல்லைப் பாதுகாப்பு படை வீரர்களுக்கு பர்மா, இலங்கையில இருந்து வந்தவர்களுக்கு தங்க கட்டுப்பாடு சட்டத்தால் முன்பு வேலை வாய்ப்பு இழந்த பொற்கொல்லர்களுக்கு இலவச வீட்டுமனை பட்டா கொடுப்பதில் முதலிடம் அளிக்கிறோம்.

மொழிப் போரில் ஈடுபட்டவர்கள் நம் மாநிலத்தில் தான் உள்ளனர். அவர்களுக்கு உதவுவது பற்றி அரசு யோசித்து முடிவு செய்யும்.

இன்றுள்ள சட்டப்படி அரசு புறம்போக்கு நிலத்தை எல்லோருக்கும் கொடுக்கிறோம். ஆனால் ஆதிதிராவிடர்களுக்கு மட்டும் ஆர்ஜிதம் செய்து கொடுக்கிறோம்.

நீதிமன்றங்களில் அதிக வழக்குகள் காரணமாக நில ஆர்ஜித சட்டத்தின் கீழான வழக்குகள் முடிவு பெறவில்லை.

உடனடி நடவடிக்கை எடுக்க அரசு கருதி உள்ளது.

நில நிர்வாகத்தை கவனிக்க கூடுதல் அரசு வழக்கறிஞரையும் நில சீர்திருத்த பணிகள் குறித்து பார்வையிட அரசு வழக்கறிஞரையும் நியமிக்க இந்த ஆண்டு அரசு நடவடிக்கை எடுத்துள்ளது. நாம் ஏற்கனவே இயற்றிய நில உச்ச வரம்பு சட்டம் டெல்லி சென்று திரும்பி வந்து விட்டது.

இதைப்பற்றி பலமுறை சொல்லியுள்ளோம்.

அதை மீண்டும் கொண்டுவந்து இந்த அரசு நிறைவேற்றும்.

சத்துவாச்சேரி என்ற இடத்தில் வடாற்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் கட்டும் திட்டத்தை அரசு பரிசீலித்து வருகிறது.

நில உடமை மேம்பாடு திட்டம் 108 வட்டங்களில் நடக்கிறது. 2 ஆண்டுகளில் முடிக்க அரசு நடவடிக்கை எடுத்து வருகிறது.

இதற்காக ரூ. 10 கோடி செலவிட அரசு உத்தேசித்துள்ளது. 7000 பேர் இந்த திட்டத்திற்காக அமர்த்தப் பட்டுள்ளனர்.

இந்த ஆண்டு திருவாரூர் கும்மிடிபூண்டி, மேட்டுப்பாளையம், மயிலாப்பூர்- திருவல்லிக்கேணி, ஆகிய வட்டாட்சியர் அலுவலகத்திற்கு சொந்த கட்டிடம் கட்டப்படும்.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.

பிரதமர் ஏற்பாடு

# பாரதி புகழ் பரப்ப தேசிய கமிட்டி

அலகாபாத, ஏப். 18— தேசிய மகாகவி பாரதியாரது பாடல்கள், எண்ணங்களை நாடு முழுவதும் பரப்ப தேசிய கமிட்டி ஒன்றை அமைக்க பிரதமர் இந்திராகாந்தி திட்டமிட்டுள்ளார்.

இத்தகவலை மத்திய அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் தெரிவித்தார்.

அலகாபாதில் பாரதி நூற்றாண்டு விழாவில் கலந்துகொண்டு ஆர். வெங்கட்ராமன் பேசினார்.

பாரதியார் ஒருபுரட்சிக் கவிஞர். தனது பாட்டால் லட்சக்கணக்கான மக்களை தட்டி எழுப்பினார் என்று கூறினார்.

# திரிபுராவில் இ. காங்கிரஸ் போராட்டம்: போலீசார் துப்பாக்கிச் சூடு

அகர்தலா, ஏப். 18— திரிபுராவில் இந்திரா காங்கிரஸ்காரர்கள் நேற்று போராட்டத்தில் ஈடுபட்டனர், தாயர் பூல் அசாம்-அகர்தலா நெடுஞ்சாலையில் சிலர் வன்முறை சம்பவங்களில் ஈடுபட்டதாகவும் கூறப்படுகிறது.

கூட்டத்தினரைக் கலைக்க போலீசார் தடியடிப்பிரயோகம் நடத்தினர். இதில் 8 பேர் காயம் அடைந்தனர். தடியடிப் பிரயோகத்தைத் தொடர்ந்து போலீசார் பல முறை துப்பாக்கிச் சூடு நடத்தினர். இதில் யாரும் காயம் அடையவில்லை என்று கூறப்படுகிறது.

சாலை போக்குவரத்தையும வாகனங்களையும் தடுத்து நிறுத்தியும் இந்திரா காங்கிரஸ்காரர்கள் கடந்த 14 ம தேதி முதல் போராட்டத்தில் ஈடுபட்டு வருகிறார்கள். சுமார் 400 பேர்களைப் போலீசார் கைது செய்தனர்.

# அடுத்த பிரதமர்: வாஜ்பாய் கருத்து

புதுடெல்லி, ஏப். 18— பாரதீய ஜனதாகட்சியின் தேசியக்குழு மாநாடு புதுடெல்லியில் நடைபெற்றது. கட்சியின் தலைவர் வாஜ்பாய் பேசியதாவது:-

பாரதீய ஜனதா கட்சி மற்ற அரசியல் கட்சியுடன் இணையும் என்ற பேச்சுக்கே இடமில்லை ஆனாலும் தேர்தலின் போது ஓட்டுகள் சிதறிப் போகாமல் இருக்கமற்றக் கட்சிகளுடன் தேர்தல் கூட்டு வைத்துக் கொள்வதுபற்றி தேவைப் பட்டால் கட்சி மீண்டும் பரிசிலனை செய்யும்.

இந்தியாவின் அடுத்த பிரதமராக ஒரு தென் இந்தியர் வர வேண்டுமென்பதே பாரதீய ஜனதா கட்சியின் கருததாகும்.

இந்தக் கருத்தின் அடிப்படையில் கட்சி செயல்படும்.

இவ்வாறு வாஜ்பாய் பேசினார்.

27-வது வட்டம்

# இதயக்கனி எம்.ஜி.ஆர். மன்ற நிர்வாகிகள்

சென்னை, ஏப். 18— சென்னை 27-வது வட்டம் பெரியார் நகர் இதயக்கனி எம்.ஜி.ஆர். மன்ற புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

அவைத் தலைவராக கே. குருசாமி, செயலாளராக ஜி. எஸ். பாஸ்கர், துணை செயலாளராக எஸ். நாகலிங்கம், பொருளாளராக ஆர். குப்புராஜ், காப்பாளராக பி. மொய்தீன் பாய், செயற்குழு தலைவராக ஜெ. சி. சேகர் மற்றும் 7 செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

சீன ஆயுதங்களுடன்

# நாகாலாந்து கலகப்படை அதிகாரிகள் இருவர் பிடிபட்டனர்

கோஹிமா, ஏப். 18— நாகாலாந்தில் கலகப் படை அதிகாரிகள் இருவர் சீன ஆயுதங்களுடன் பிடிபட்டுள்ளனர்.

வடக்கு மணிப்பூர் மாவட்டத்தில் இவர்கள் இருவரையும் ராணுவத்தினர் மடக்கிப் பிடித்தனர்.

இவர்களில் ஒருவர் காப்டன். மற்றொருவர் லெப்டினென்ட்.

இவர்களிடம் இருந்து குண்டுகள் நிறைந்த சைனா துப்பாக்கி, சைனாவில தயாரிக்கப் பட்ட கைகுண்டு மற்றும் பல ஆயுதங்கள். முக்கியமான தஸ்தாவேஜுகள் கைப்பற்றப்பட்டன.

கிண்டியிலுள்ள டான்சி

# டைகாஸ்டிங் தொழிற்சாலை லே - ஆப் நீக்கம்

சென்னை, ஏப். 18— டான்சி அண்ணா பொது தொழிலாளர்கள் பெடரேஷன் தலைவர் வே. மாயன் பொதுச் செயலாளர் எம். கே. வி. சந்திரசேகரன் மற்றும் நிர்வாகிகள் டான்சி தொழிலாளர்கள் குறித்து டான்சி நிர்வாக இயக்குநருடன் பேச்சு வார்த்தை நடத்தினர்.

பேச்சு வார்த்தையில் சுமுக முடிவு ஏற்பட்டது. அந்த முடிவுகளின்படி, மின்வெட்டினால் ஏற்பட்ட லே ஆப்பினால் பாதிக்கப்பட்ட டான்சி தொழிலாளர்களுக்குமுன் பணம 200 ருபாய் வழங்குவது என உத்தரவு அளிக்கப்பட்டது.

நீண்டகாலமாக கிண்டி டான்சி, டைகாஸ்டிங் தொழிற் சாலையில் தொடர்ந்து இருந்துவந்த லே ஆப் முழுமையாக நீக்கப்பட்டது.

மாநிலங்களவையில் ஏ. பி. ஜனார்த்தனம் முழக்கம்

# ஐம்பது ஆண்டுகளுக்கு தமிழ்நாட்டை திராவிட அணிதான் ஆட்சிபுரியும்

**புதுடெல்லி, ஏப். 18- இன்னும் ஐம்பது ஆண்டுகளுக்கு தமிழ்நாட்டை எங்கள் திராவிட அணிதான் ஆண்டுகொண்டு இருக்கும் என்று ஏ. பி. ஜனார்த்தனம் எம். பி. முழங்கினார்.**

மாநிலங்களவையில் ஏ. பி. ஜனார்த்தனம் பேசுகையில் கூறியதாவது:—

இந்தி வெறியர்கள் தமிழகத்தின் மீது கட்டாயமாக இந்தியை திணிக்க புகுந்ததால், 1937, 1948 1965, இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சிகள் நடைபெற்றன. அவை தமிழ் நாட்டில் காங்கிரஸ் ஆதிக்கத்தை முடித்து வைத்து விட்டன. அந்தக் காங்கிரசைப் பார்த்து நான் மிகவும் வருந்துகிறேன். அனுதாபப்படுகிறேன். 1967-ல் நாங்கள் கோட்டைக்குள் நுழைந்தோம். மன்னிக்க வேண்டும். நான் சொல்வது பெருமை அடித்துக் கொள்வதாகப் படலாம், ஆணவமாகக் கூடத் தென்படலாம், ஆனால் இனியும் 50 ஆண்டுகளுக்கு தமிழ் நாட்டை எங்கள் திராவிட அணிதான் ஆண்டு கொண்டிருக்கும்.

நாங்கள் தமிழகத்தை அந்த அளவுக்கு பண்படுத்தி இருக்கிறோம. தனித்த புதுமைசிந்தனைகளைத தந்திருக்கிறோம. பிற்பட்டவர்களை, தாழ்த்தப் பட்டவர்களை நாங்கள்தான் முதன் முதலில் அணைத்துக் கொண்டோம். நாங்கள் தந்த திட்டங்களை இங்கே விரித்துரைக்க விரும்பவில்லை. நான் இங்கே இந்தி குறித்தே பேசவேண்டியுள்ளது.

இராசாசி 1937-ல் கட்டாய இந்தியைப் புகுத்தினார். அதைத் தமிழர்கள் மிகக் கடுமையாக எதிர்த்தார்கள். எங்கள் மொழியின் மீது எங்களுக்குப் பெருமை இருக்கிறது.

## இந்தி திணிப்பு கூடாது

நாங்கள் கட்டாய இந்தியை எதிர்க்கிறோம்? வங்காளிகளிடம அதை ஏன் புகுத்துகிறீர்கள்? எல்லா மாநிலங்களிலும் ஏன் திணிக்கிறீர்கள்?

இந்தி தானாக வளரட்டும இந்தி வெறியர்களை விட லதா மங்கேஷ்கரின் பாடல்கள் சென்னைத் தெருக்களில் இந்திக்கு நல்ல தூதுவர்களாக உள்ளன.

எனக்கு பிரேம்சந்தின் இந்தி, இராகுல சாங்கிருத்தியாயனின் இந்தி, ஆசார்ய நரேந்திர தேவரின் இந்தியில் உள்ளகருத்துக்கள் பிடிக்கும. அவர்களுக்கு நான மதிப்புத் தருகிறேன். ஆனால் எங்களை இரண்டாந்தரக் குடிமக்களாக்கத் துடிக்கிறவர்கள், நாங்கள் கலகக்காரர்கள் என்று கணக்குப் போடுகிறவர்கள் நிச்சயம் தப்புக் கணக்குப் போடுகிறார்கள்

ஆங்கிலம் நமக்கு அந்நியமானது என்கிறீர்கள். மேகாலயத்தில் ஆங்கிலம் அரசு மொழி. உங்களுக்கு ஆங்கிலம் அந்நியம்! அருணாசலப் பிரதேசத்தில் ஆங்கிலம் அரசோச்சுகிறது.

இந்த கம்பியில்லாக் கருவி ஆங்கிலம், இந்த கடிகாரம் ஆங்கிலம், மேதைமே அவர்களின் பாராளுமன்ற விதிகள் ஆங்கிலம், இந்த மாமன்றங்களைகட்டியவர்கள் ஆங்கிலேயர்கள். அவர்கள் நமக்கு புதுதில்லியை விட்டுச் சென்றார்கள்.

ஆங்கிலம் மிகவும் பயனுள்ளது. ஜெட்யுகத்துக்கு மிகவும் பொருத்தமானது.

உங்கள் வீடுகளில் உங்கள் குழந்தைகள் டி. வி. விரும்புகின்றன. நீங்கள் அயல் நாட்டுக்குப் பறக்க விரும்புகிறீர்கள். வால்டார்ப் அஸ்டோரியா ஓட்டலில் தங்க விரும்புகிறீர்கள். உலகம் சுற்றத் தவிக்கிறீர்கள். இத்தனையும தேவை, ஆனால் ஆங்கிலம கூடாது. பிரசில் நாட்டில் இந்தி தட்டுப் பொறிக்கத் தவிக்கிறீர்கள்.

பாராளுமன்ற நூலகத்துக்கு வாருங்கள்.

அங்கே எத்தனை எத்தனை ஆங்கில சஞ்சிகைகள், நாளேடுகள் உள்ளன? அவை உலகம் முழுவதும் செல்கின்றன. ஆங்கிலேயர்கள் விட்டுச் சென்ற நல்லவைகளிலேயே மிகச் சிறந்தது ஆங்கிலம்தான். தென்னகத்தில் நாங்கள் அதை விரும்புகிறோம்.

இத்தனைக்குப் பிறகும் நீங்கள் இந்தியை திணிக்கத் துடித்தால் அடுத்த தேர்தலில் நீங்கள் டெபாசிட் மட்டுமல்ல மேலும்செல்வாக்கு இழப்பீர்கள்.

இவ்வாறு ஏ.பி. ஜனார்த்தனம் பேசினார்.

# நெல்லை அருகே பஸ்விபத்து சாவு 2 காயம் 22

திருநெல்வேலி, ஏப் 18— நெல்லை அருகே அரசங்களத்தில் ஒரு பஸ் மரத்தில் மோதி விபத்துக்குள்ளாகியது. இதில் இருவர் மரணம் அடைந்தனர். 22 பேர் காயம் அடைந்தனர்.

மற்றோர் பஸ் மீது மோதலைத்தவிர்க்க இந்த பஸ் வேறு பக்கம் திரும்பி மரத்தில் மோதியது.

காயம் அடைந்தவர்களில் ஒருவர் உடல்நிலை மோசமாக உள்ளது.

காயம் அடைந்தவர்கள் கோயில்பட்டி, பாளையங்கோட்டை மருத்துவ மனைகளில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.





Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029.

Editor: E. PARASURAMAN